[22nd August 1961

### *Eye-sight of school children*

*1334 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

பள்ளியில் படிக்கும் சிறுவர்களின் கண் பார்வை, அவர்கள் படிக்கும் புத்தகங்களிலுள்ள எழுத்துக்களாலும், அவர்கள் படிக்கும் பள்ளிக்கூடங்களாலும் பாதிக்கப்படாமலிருக்க

(i) அவர்கள் படிக்கும் புத்தகங்களை வெளியிடும்போதும்,

(ii) அவர்கள் படிக்கும் பள்ளிக்கூடங்களைக் கட்டும்போதும் கண் வைத்திய நிபுணர்களைக் கலந்தாலோசித்துச் செய்ய அரசாங்கத்திற்கு உத்தேசமுண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (i) & (ii) No, Sir.

SRI A. VEDARATHNAM : படிக்கின்ற பாடப் புத்தகங்களின் மூலமாகவும் பள்ளிக்கூட கட்டிடங்கள் மூலமாகவும் மாணவர்களுடைய கண் பார்வை பாதிக்கப்படுகின்றது என்ற விஷயத்தை அரசாங்கம் ஒப்புக்கொள்ளுகிறதா ? அப்படியானால் அதற்கு என்ன பரிகாரம் செய்வதாக உத்தேசம் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதையெல்லாம் ஆலோசித்து, எந்த முறையிலே 1, 2 வகுப்புக்களுக்கு எழுத்துக்கள் இருக்க வேண்டும், 3, 4, 5 வகுப்புக்களுக்கு எழுத்துக்கள் இருக்க வேண்டும், அதற்கு மேல் உள்ள வகுப்புக்களுக்கு எழுத்துக்கள் இருக்க வேண்டும் என்பதைப் பற்றியும், புத்தகங்கள் எந்தக் காகிதத்திலே அச்சிடப்பட வேண்டும் என்பதைப் பற்றியும் இப்பொழுது குறிப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த முறையில் வெளியிடப்படும் புத்தகங்களுக்குத்தான் அனுமதி கொடுக்கப்படுகிறது. கட்டிடங்கள் கட்டுவதிலேயும், எந்தப் பகுதியிலிருந்து வெளிச்சம் வரவேண்டும், காற்றோட்டத்திற்கு எவ்வாறு வசதி இருக்க வேண்டும் என்பதற்கெல்லாம் விதிகள் போடப்பட்டிருக்கின்றன. ஆகவே புதிதாக கண் வைத்திய நிபுணர்களைக் கலந்து ஆலோசிக்க வேண்டிய அவசியமில்லை.

SRI T. S. RAMASWAMI : Is it a fact that recent medical inspection reports have revealed an increase in the eye defects among the school children?

THE HON. SRI C. SUBRAMANIAM : The question should be addressed to my colleague, the Minister for Health.

SRI K. VINAYAKAM : Even though the Government have stipulated some rules as to how the books should be printed and how they should be distributed, is the Hon. the Minister aware of the fact that the Publishers who are interested in these text-books submit a good variety of books before the Text-Books Committee for their approval and after getting their approval and while putting them on the market for sale, they print those books in small type and cheap paper? If so, may I know what steps the Government propose to take to ban such kind of books or to make them produce better books or at least print them in the same paper and same type that they submitted to the Text-Books Committee in the first instance?

THE HON. SRI C. SUBRAMANIAM : Whenever there is an infringement and if that is brought to the notice of the Government, we do take action against the publisher by banning all the books published by that particular publisher. Apart from that,

22nd August 1961]

the hon. Member may perhaps be aware that the Government are taking steps to publish their own text-books and I hope that would set the standard for the publication of text-books by private publishers also when they have got to publish books.

### *Basic Training College, Orathanad*

* 1335 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் நிதி அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) ஒரத்தநாட்டிலிருக்கும் ஆதாரப் பயிற்சிக் கல்லூரியில் பயில வரும் பெண்களுக்குத் தனி ஹாஸ்டல் கட்ட உத்தேசமுண்டா?

(இ) அதன் விவரமென்ன?

(உ) இப்போது அங்கு எத்தனை பெண் பட்டதாரிகள் பயிற்சி பெறுகின்றனர்?

(எ) அவர்களுக்குத் தனி வசதி என்ன அளிக்கப்பட்டிருக்கிறது?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) No, Sir.

(இ) Does not arise.

(உ) None.

(எ) Does not arise.

SRI A. VEDARATHNAM: இந்த மாநிலத்திலே இந்த ஒரு ஆதாரப் பயிற்சிக் கல்லூரிதான் இருக்கிறது. பெண்கள் பயிற்சி பெறுவதற்கு தனி வசதி ஒன்றும் இல்லை. இப்பொழுது ஹைஸ்கூல்களில் எல்லாம் ரொம்ப பெண்கள் படிக்கின்ற காரணத்தினால், அவர்களுக்கு எல்லாம், அதாவது ட்ரெயினிங் ஸ்கூல்களுக்குப் போக விரும்புகிறவர்களுக்கு மறு பயிற்சி அளிக்க வேண்டியிருக்கிறது. அதற்கான வசதியில்லாத காரணத்தினால் அதை அரசாங்கம் கவனித்து, வேண்டிய வசதிகள் செய்து கொடுக்க முன் வருவார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM: பெண் மாணவிகளை இதிலே சேர்ப்பதற்கு யூனிவர்ஸிடியிடமிருந்து அனுமதியில்லை. அவர்கள் செய்துள்ள முடிவு சரியான முடிவு என்றே தோன்றுகிறது. பெண்களுக்கு இந்த மாதிரி இன்னொரு கல்லூரி ஆரம்பிப்பதுதான் சரி. அதைப் பற்றி ஆலோசித்துப் பின்னர் முடிவு செய்ய வேண்டியதாக இருக்கும். உடனடியாக இது பரிசீலனையில் இல்லை.

SRI A. VEDARATHNAM: பெண்களுக்கென்று தனிக் கல்லூரி ஆரம்பிப்பதற்கு அரசாங்கத்திற்கு உத்தேசமுண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM: உடனடியாக ஆரம்பிப்பதற்கு உத்தேசமில்லையென்று சொன்னேன். இதைப் பற்றிக் கொஞ்சம் தாமதித்துத்தான் யோசிக்க வேண்டியிருக்கும். மற்ற துறைகளிலே இப்பொழுது அதிகக் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது.

### *Clerks in Judicial Department*

* 1336 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: Will the Hon. the Minister for Home be pleased to state whether the Government have given effect to the recommendations of the Madras Pay Commission for upgrading clerks in the Judicial Department?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Not yet, Sir. The matter is under the Government's consideration.